



# சிவாஜி

ஞாயிறு வாரப்பதிப்பு

கிராம, சமுதாய நல, கலை, இலக்கியப் பத்திரிகை


# 'சிவாஜி'யின் வெள்ளி விழா

## ஜூலை-29ல் மலர் வெளியீடு

உங்கள் அன்புக்குரிய 'சிவாஜ்' 25 ஆண்டுகள் நிறைந்து 26-ம் ஆண்டில் தொடர்ந்து பணிபுரிவதை அறிவீர்கள்.

1935 டிஸம்பர் 5-ல் முதன் முதலாக சிவாஜி வெளிவரத் தொடங்கியது. வாரந்தவறுமல் வெளிவந்து, சென்ற டிஸம்பரிலேயே 25—ஆண்டு நிறைவெய்தியது. வெள்ளி விழாவை அப்பொழுதே கொண்டாடத்தான் எண்ணியிருந்தோம்.

பத்திரிகையின் வெள்ளி விழா என்பது அதன் சிறப்பு மலர் அல்லாது வேறெத்தாலும் சிறக்காது அல்லவா? எனவே வெள்ளி விழா மலரைச் சிறந்த முறையில் தயாரித்து வெளியிடுவதன் மூலமே 'சிவாஜி' வெள்ளி விழாவைத்தக்க முறையில் கொண்டாடுவதாகும் என்பதனுல், விழாவைப் பல மாதங்கள் ஒத்திப் போட்டுக் கொண்டே வந்து விட்டோம்.

சிவாஜியுடன் கால் நூற்ருண்டாகத் தொடர்பு கொண்டுள்ள வாசகர்கள், எழுத்தாளர்கள், விளம்பரதாரர்களான வணிகர்கள், அனைவரின் ஒத்துழைப்பையும் ஆதரவையும் ஒன்று திரட்டி, மிகச்சிறந்த முறையில் மலர் தயாராகிக் கொண்டிருக்கிறது.

29-ஜூலை, 1961-ல் திருச்சியில் வெள்ளி விழா நடைபெறுகிறது. தமிழகத்தின் தனிப்பெரும் தலைவரும் மக்களின் மனங்கவர்ந்த முதலமைச்சருமாக விளங்கும் கனம் காமராஜ் அவர்கள் விழாவிற் கலந்து கொள்ளவும், மலர் வெளியீட்டை நடத்திவைக்கவும் அன்புடன் இசைந்துள்ளார்கள்.

தமிழுக்கும், தமிழ் மக்களுக்கும் ஆரவாரம் சிறிதுமில்லாத முறையில் அடக்கமாக 25 ஆண்டுகள் தொடர்ந்து பணிபுரியும் வாய்ப்பு சிவாஜிக்குக் கிடைத்து வந்திருக்கிறது. நடுநின்று சிந்தித்து, பொது நலத்தையே குறிக்கோளாகக் கொண்டு கருத்துக்களைப் பரப்பி வந்திருக்கும் சிவாஜியைத் தமிழ் நாடு உரிய ஆதரவு தந்து வளர்த்திருக்கிறது. இனியும் சிவாஜியின் தொண்டு சிறக்கத் தமிழ் மக்கள் தங்கள் ஆதரவைத் தொடர்ந்து அளிப்பார்கள் என்பதைப் பற்றி ஐயமில்லை.

விடுதலைப் போராட்டக் காலத்தில், மாபெரும் தேசீய வீரனுடைய திருப்பெயருடன் தோன்றிய சிவாஜிக்குப் புதிய பாரதத்தின் நிர்மாண வேலைகளிலும் பங்கிருக்கிறது. இதனைச் சரியாக நிறைவேற்ற மக்களின் ஆதரவும் ஆண்டவனுடைய அருளுமே எங்கள் மூலதனம்.

—ஆசிரியர்.

## பதவித் துறப்பு கட்டாயமில்லை

பத்தாண்டுக் காலம் பதவி வகித்த சட்டசபை அங்கத்தினர்கள் 1962-ல் விலகிவிட வேண்டுமென்று மத்திய தேர்தல் குழு கட்டாயமாக விதி எதுவும் வகுக்கவுமில்லை; பிரதேச தேர்தல் கமிட்டிகளுக்கு இவ்வாறு உத்தரவு பிறப்பிக்கப் படவுமில்லை'' என்று அனைத்திந்திய காங்கிரஸ் அக்ராசனர் திரு. சஞ்சீவி ரெட்டி இப்போது தெளிவுப்படுத்தியிருக்கிருர்.

சட்டசபையில் தற்போது நீண்ட காலமாகப் பணியாற்றி வரும் அங்கத்தினர்கள் விலகி, இவர்களுக்குப் பதில் புதிய உறுப்பினர்கள் வரலாமென்றும், பழைய அங்கத்தினர்களில் சிலர் நீடிப்பது பொது நலனுக்கும், காங்கிரஸ் நிறுவனத்தின் நலனுக்கும் அவசியம் என்ருல் அவர்கள் நீடிக்கலாமென்றும், எவ்வளவு காலத்திற்குப் பிறகு சட்டசபையாளர் விலக வேண்டுமென்பது குறித்து கமிட்டி வரம்பொன்றும் நிர்ணயிக்கவில்லை என்றும் அவர் கூறினர்.

அபேட்சகர்கள் தேர்வுக்குப்பிரதேச தேர்தல் கமிட்டிகள் எந்தக் கொள்கைகளை மேற்கொண்டாலும், மத்திய தேர்தல் கமிட்டி வகுத்துள்ள விதிகளுக்குட்பட்டே இந்தக் கொள்கைகள் இருக்குமென்றும் மத்திய தேர்தல் கமிட்டிதான் இறுதியாக அபேட்சகர்களைத் தேர்ந்தெடுக்கும் என்றும் அபேட்சகர்கள் ஜாபிதாவில் அபிப்பிராயபேதம் ஏற்பட்டால் அபேட்சகர்களின் முழு ஜாபிதாவை மத்தியக் கமிட்டிக்குப் பிரதேச தேர்தல் கமிட்டி சமர்ப்பிக்க வேண்டுமென்றும் அவர் குறிப்பிட்டார்.

பத்தாண்டுகள் பதவியிலிருந்தவர்கள் தாமாகவே பதவியை விட்டு விலகி, காங்கிரஸ் நிறுவன வேலைகளில் ஈடுபடவேண்டுமென்ற யோசனையை பவநகர் காங்கிரசில் தான் வெளியிட்டதாகவும், மந்திரிப் பதவிகளைப் பற்றியே தான் பிரஸ்தாபித்ததாகவும் அவர் தெரிவித்தார்.



23–7–1961

# முந்திரி

சுமார் 400 வருஷங்களுக்கு முன்பு இந்தியாவில் குடியமர்ந்த போர்ச்சுக்கீசிய மக்களால் இந்நாட்டுக்குக் கொண்டுவரப்பட்ட முந்திரிக் கொட்டை, இந்தியாவின் வெளிநாட்டு வர்த்தகத்தில், குறிப்பாய் டாலர் நாணயம் சம்பாதிப்பதில் முக்கியமானதொரு ஸ்தானத்தை வகித்து வருகிறது.

வெளிநாடுகளில், முக்கியமாய் அமெரிக்காவில், முந்திரிப் பருப்பு மிகவும் பிரபலமடைந்திருக்கிறது; சிற்றுண்டி உணவுக்கும், சாக்லேட் தயாரிப்புக்கும் இது உபயோகப்படுகிறது.

சுமார் 35 நாடுகள் இந்தியாவிலிருந்து முந்திரிப் பருப்பு இறக்குமதி செய்து வருகின்றன. அந்நாடுகளில் அமெரிக்கா, ரஷ்யா, பிரிட்டன், கானடா, ஜெர்மனி, சிங்கப்பூர், ஹாங்காங், ஜப்பான், மத்திய கிழக்கு நாடுகள் ஆகியவை முக்கியமானவையாகும். சென்ற வருஷம் இந்தியாவிலிருந்து ஏற்றுமதி செய்யப்பட்ட முந்திரிப் பருப்பின் மொத்த அளவில் அமெரிக்காவின் பங்கு மட்டும் சுமார் ரூ. 10·60 கோடி ஆகும்.

முந்திரிப் பருப்பு ஏற்றுமதிக்காகப் புதிய மார்க்கெட்டுகள் கண்டுபிடிக்கப்பட்டு வருகின்றன; இந்த முயற்சியில் ஓரளவு வெற்றி கிடைத்திருக்கிறது. வெளிநாடுகளிலுள்ள முக்கிய நகரங்களில் நடைபெறுகிற வர்த்தகக் கண்காட்சிகளிலும், இந்திய வர்த்தக நிலையங்களிலும் முந்திரிக்கொட்டைகளும் முந்திரிப் பருப்பும் காட்சியில் வைக்கப்படுகின்றன.

கவர்ச்சிகரமான பிளாஸ்டிக் பைகளில் முந்திரிப் பருப்புகள் அடைக்கப்பட்ட மாதிரிப் பொட்டலங்கள் தூதராலயங்கள் மூலமாகவும் வர்த்தகப் பிரதிநிதிகள் மூலமாகவும் விநியோகம் செய்யப்படுகின்றன.

உள்நாட்டிலுங்கூட, சமீப காலங்களில் முந்திரிப் பருப்பு வர்த்தகம் மிகவும் மும்மரமடைந்திருக்கிறது; ரெஸ்டாரெண்டுகளிலும் சிற்றுண்டிச் சாலைகளிலும் ரயில்வே நிலையங்களிலும் உப்பிட்டுப் பக்குவம் செய்யப்பட்ட முந்திரிப் பருப்பு நன்கு விற்பனையாகிவருகிறது. முந்திரிப் பருப்பு பாதாம் பருப்பைப் போலவே சத்துள்ள உணவுப் பொருளாக விளங்குகிறது.

முந்திரிப் பருப்பில் 21·2 சதவிகிதம் புரதச் சத்தும், 46·9 சதவிகிதம் கொழுப்பும், கந்தகம், இரும்புச் சத்து "ஏ" வைட்டமின் ஆகியவையும் அடங்கியுள்ளன.

தற்போது இந்தியாவில் ஆண்டுதோறும் சுமார் 70 ஆயிரம் டன் முந்திரிக் கொட்டை உற்பத்தியாவதாக மதிப்பிடப்பட்டிருக்கிறது. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் இந்த உற்பத்தியை இருமடங்காக ஆக்குவதற்குத் திட்டங்கள் வகுக்கப்பட்டு வருகின்றன.

முந்திரிப் பருப்பைப் பக்குவம் செய்யும் தொழிற்சாலைகள் தற்போது 200–க்கும் அதிகமாக இந்நாட்டில் உள்ளன. இவற்றில் பெரும்பாலானவை கேரளாவில் அமைந்துள்ளன.

தற்போது இந்நாட்டில் உற்பத்தியாகிற கச்சா முந்திரிக் கொட்டை இந்தத் தொழிற்சாலைகளின் ஐந்து மாதத்தேவைகளுக்கே போதுமானதாக இருக்கிறது. எனவே, இதற்குச் சமமான அளவுக்குக் கிழக்கு ஆப்பிரிக்காவிலிருந்து கச்சா முந்திரிக் கொட்டை ஆண்டுதோறும் இறக்குமதி செய்யப்பட்டு வருகிறது.

மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் "ஒட்டுக் கட்டிய" செடிகளை உபயோகிப்பதன்மூலம் கணிசமான நிலப் பரப்பில் முந்திரி சாகுபடி செய்ய உத்தேசிக்கப்பட்டிருக்கிறது. "ஒட்டுக் கட்டும்" முறைப்படி தயாரிக்கப்பட்ட பதியங்கள் 20 மாத காலத்தில் பலனளிக்கக்கூடியவையாக இருக்கின்றன; விதை போட்டு முளைக்கும் செடி பலன்கொடுப்பதற்கு நான்கு ஆண்டுகள் வரை ஆகிறது.

பதியம் தாய் மரத்திலிருந்து வெட்டி அகற்றப்படுவதற்கு முன்பே புஷ்பித்துக் காய்க்கும் பக்குவத்தை அடைந்துவிடும்படி செய்வதே இந்தப் புதிய முறை. அதை வெட்டி நடும்போது வேருடனும், இலைகளுடனும் கூடிய ஒரு இளஞ்செடியே கிடைத்துவிடுகிறது. இந்தச் செடிகள் தாய் மரத்தின் ஒரு பகுதியாகவே இருப்பதால், தாய் மரத்துக்குள்ள தன்மைகள் எல்லாவற்றையும் பெற்றிருக்கும்; விதைபோட்டு முளைத்துவரும் செடி இவ்வாறிருக்காது.

பிரேஸிலிலும் கிழக்கு ஆப்பிரிக்க நாடுகளிலும் முந்திரி சாகுபடி வர்த்தக ரீதியில் நடைபெற்று வந்தபோதிலும், இந்தியாவில் மட்டும்தான் முந்திரியைப் பக்குவம் செய்யும் தொழிற்சாலைகள் உள்ளன. இத்தொழிலில் பயிற்சி பெற்றவர்கள் இங்கே ஏராளமாக இருப்பதே இதற்கு காரணமாகும்.

இந்தியாவில் தற்போது முந்திரி மரம் ஒன்றுக்குச் சராசரியாக 9 பவுண்டு வீதமே முந்திரிக் கொட்டை கிடைக்கிறது. ஆனால், பொறுக்கியெடுத்த விதைகளை உபயோகித்து வெகு கவனமாக வளர்க்கப்பட்ட தனிப்பட்ட மரங்கள் சிலவற்றில் 100 பவுண்டுக்கு மேல்கூடக் கிடைத்திருக்கிறது.

முந்திரிப் பழம் மிருதுவாகவும் சாறு நிறைந்ததாகவும் இருக்கிறது; காரோடீனும் அடங்கியிருக்கிறது. முந்திரிப்பழச் சாற்றிலிருந்து மதுரமான சர்பத் தயாரிக்கலாம். இந்தச் சாறு புளிக்க வைக்கப்பட்டு மதுபானம் தயாரிக்கப்படுகிறது. வாந்தி எடுப்பதை நிறுத்துவதற்கும், தொண்டைப் புண் இருந்தால் கொப்பளிப்பதற்கும் முந்திரிப் பழச் சாற்றை உபயோகிக்கலாம்.

முந்திரிக்கொட்டையின் மேல் ஓட்டிலிருந்து முந்திரிஎண்ணெய் எடுக்கப்படுகிறது; இந்த எண்ணெய் முக்கியமானதும், உபயோகமுள்ளதுமான ஒரு வர்த்தகப் பண்டமாகும். கரும் பழுப்பு நிறமுள்ள இந்த எண்ணெய், தண்ணீர் ஒட்டாத ஒரு சாதனமாகவும், படகுகள், மீன் வலைகள், மரச் சாமான்கள் ஆகியவற்றின் மீது பூசப்பட்டுள்ள வர்ணத்தைப் பாதுகாப்பதற்கான ஒரு மேல் பூச்சுச்சாதனமாகவும் உபயோகிக்கப்படுகிறது. வார்னிஷுகள், தொழில்துறை உபயோகத் தளவரிசைக் கற்கள், சிலவகை சிமிட்டித் தயாரிப்புகள், டைப்ரைட்டர் ரோலர்கள், மோட்டார் பிரேக் சாதனங்கள், பசைப் பொருள்கள், வர்ணத் தயாரிப்புக்கான பசைப் பொருள்கள், இங்கி, எண்ணெய்ப் பூச்சுத் துணி, வர்ணங்கள், தண்ணீர் ஊறாத காகிதங்கள், அட்டை தயாரிப்பு முதலிய பல்வேறு தயாரிப்பு வேலைகளுக்கு முந்திரி எண்ணெய் பயன்படுத்தப்படுகிறது.

மண்ணெண்ணெய் அல்லது டீஸல் எண்ணெயுடன் ஐந்து

(தொடர்ச்சி 11-ம் பக்கம்)

மூன்றுவது திட்டத்தில்

# பின்தங்கிய வகுப்பினரின் நல்வாழ்வுத் திட்டங்கள்

பின்தங்கிய வகுப்பினரின் நல்வாழ்வுத் திட்டங்களுக்காக மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தில் மொத்தம் 114 கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது. இரண்டாவது திட்ட காலத்தில் 79 கோடி ரூபாய்தான் ஒதுக்கப்பட்டிருந்தது.

இதற்காக ஒதுக்கப்பட்டிருக்கும் 114கோடி ரூபாயில், சுமார்42·5 கோடி ரூபாய் கல்வி வளர்ச்சித் திட்டங்களுக்காகவும், 46 கோடி ரூபாய் பொருளாதார மேம்பாட்டுத் திட்டங்களுக்காகவும், 25·5 கோடி ரூபாய் சுகாதாரம், ஜாகை வசதி, பிற திட்டங்கள் ஆகியவற்றுக்காகவும் ஒதுக்கப்படும்.

பொருளாதார மேம்பாட்டுத் திட்டங்களில், கூட்டுறவு சங்கங்களை அமைக்கும் விஷயத்தில் விசேஷ கவனம் செலுத்தப்படும்; ஷெட்யூல் குடியினர் தற்போது கண்டிராக்டர்களால் சிரமத்துக்குள்ளாகி வருகின்றனர். ஓரிடத்தில் நிலைபெருத விவசாயத்தில் ஈடுபட்டிருப்பவர்களுக்கு புனர்வாழ்வளிக்கும் திட்டத்துக்கு முதலிடமிருக்கும். பூர்வ குடிப் பகுதிகளில் நிலங்களைச் சீர்படுத்துவது, நில மீட்சி, மண்ணரிப்புத் தடுப்பு, சிறு பாசனவசதிகள், கால்நடை அபிவிருத்தி, மீன் வளம், கோழி, வாத்து வகையரு அபிவிருத்தி, கிராமத் தொழில்கள் ஆகிய நடவடிக்கைகளுக்காகப் பெருமளவுத் திட்டங்கள் மேற்கொள்ளப்படும்.

மூன்ருவது திட்ட காலத்தில் நாட்டின் பல பகுதிகளிலும் பூர்வ குடி அபிவிருத்தித் தொகுதிகளை ஏற்படுத்த உத்தேசிக்கப்பட்டிருக்கிறது. இரண்டாவது திட்ட காலத்தில் ஏற்கெனவே 43 அபிவிருத்தித் தொகுதிகள் நடைபெற்று வருகின்றன. ஒவ்வொரு தொகுதிக்கும் முதல் கட்டத்தில் மொத்தம் 22 லட்சம் ரூபாய் ஒதுக்கப்படும். இரண்டாவது கட்டத்தில் ஐந்தாண்டு காலத்துக்கு 10 லட்சம் ரூபாய் கிடைக்கும்.

இரண்டாவது திட்ட காலத்தில் ஷெட்யூல் வகுப்பைச்சேர்ந்த சுமார் 90,000 மாணவர்களுக்கு உபகாரச் சம்பளங்கள் வழங்கப்பட்டிருக்கின்றன. மெட்ரிகுலேஷன் வகுப்புக்கு மேற்பட்ட வகுப்புகளுக்காக சுமார் 40,000 மாணவர்களுக்கு உபகாரச் சம்பளங்கள் வழங்கப்பட்டிருக்கின்றன. மூன்ருவது திட்டகாலத்தில் பல்கலைக் கழகப் படிப்புகளுக்காகவும், அதற்கு முந்திய படிப்புகளுக்காகவும் உபகாரச் சம்பளங்களை வழங்க மேலும் 17 கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது. இவை தகுதி-பொருளாதார நிலை அடிப்படையில் வழங்கப்படும்.

பூர்வகுடியைச் சேர்ந்தவர்கள் பலரையும் சமூகப் பணியில் ஈடுபடச் செய்வதன் அவசியம் மூன்ருவது திட்டத்தில் விசேஷமாக வலியுறுத்தப்பட்டிருக்கிறது. ஷெட்யூல் பகுதியில் பணியாற்றுவதற்கெனத்தொழில்நுட்ப சிப்பந்திகளும் பிற சிப்பந்திகளுமடங்கிய விசேஷ உத்தியோகப் பிரிவு ஒன்றை அமைக்கும் விஷயம் மத்திய, ராஜ்ய சர்க்கார்களின் பரிசீலனையிலிருந்து வருகின்றது.

*

## விலைவாசிகளைக் கட்டுப்படுத்தல்

விவசாயிகள் நன்மை பெறும்படி பார்த்துக் கொள்வதற்காக மூன்ருவது திட்டகாலத்தில், தானியங்களின் விலையும் பிற விளைபொருள்களின் விலையும் விதைப்புக்காலம் ஆரம்பமாவதற்கு முன்னேயே நிர்ணயிக்கப்படுமென்பதாக திட்டக் கமிஷன் அங்கத்தினர், ஸ்ரீமன் நாராயண் கூறினர். மத்தியப்பிரதேச காங்கிரஸ் பயிற்சி முகாமில் பேசிய அவர் நாட்டின் பல்வேறு இடங்களில் வேண்டிய அளவு கையிருப்பு வைத்துக் கொள்வதன் மூலம் உபயோகிப்பவர்களின் நலன் பாதுகாக்கப்படுமென்பதையும் உள்நாட்டில் மேற்கொள்ளப்படும் கொள்முதல் மூலமே கையிருப்பு சேர்க்கப்படுமென்பதையும் கூடத் தெரிவித்தார்.

கையிருப்புகளைச் சேமித்து வைக்கும் விஷயத்தில் இருந்து வரும் சிரமங்களைப் பற்றிக் குறிப்பிடுகையில், மூன்ருவது திட்ட காலத்தில் 86 லட்சம் டன் உணவுத் தானியத்தைச் சேர்த்து வைப்பதற்கு ஏற்பாடு செய்யப்படுமென்றும், இப்போது சுமார் 25 லட்சம் டன் உணவுத்தானியத்தைச் சேமித்துவைக்க மத்திய சர்க்காரிடம் வசதியிருக்கிறதென்றும் கூறினர். மூன்ருவது திட்டத்தில் 50 லட்சம் டன் சேமித்து வைப்பதற்கேற்ற வசதியிருக்குமென்றும் அவர் கூறினர்.

### உபயோகிப்போர் கூட்டுறவுச் சங்கங்கள்

விலைவாசிகளைக் கட்டுப்படுத்துவதன் மூலம் குறிப்பாக உணவுத் தானியங்கள், துணி, பிற அத்தியாவசிய சாதனங்கள் ஆகியவற்றின் விலைகளைக் கட்டுப்படுத்துவதன் மூலம்தான் ஐந்தாண்டுத் திட்டத்தை வெற்றிபெறச் செய்ய முடியுமென்றும், அதற்காக நாடு முழுவதும் உற்பத்தியாளர், உபயோகிப்போர் கூட்டுறவு சங்கங்களை ஏற்படுத்த வேண்டுமென்றும் ராஜாங்க வர்த்தகத்தைப் பெருக்க வேண்டும் என்றும் கூறினர்.

இரண்டாவது திட்ட இறுதிக்குள்ளாக சுமார் 1900 கூட்டுறவு விற்பனைச் சங்கங்கள் ஏற்படுத்தப்பட்டிருக்குமென்று மதிப்பிடப்பட்டிருக்கிறது. மேலும் 600 சங்கங்கள் தொடங்கப்படும்.

நகர்ப்புறங்களில் நியாயமான விலைக்கு உணவுத் தானியங்கள் கிடைக்கச் செய்வதற்காக அங்கும் கூட்டுறவுச் சங்கங்களை நிறுவ ஏற்பாடு செய்யப்படும்.

*

பாப்பாப்பாட்டு: சாமி பழ

## கடல்

*

தம்பீ! கடலைப் பார்த்தாயா?—அலை
தாவிக் குதிப்பதைப் பார்த்தாயா?
அம்புலி தன்னைக் கண்டதுமே—அது
அண்ணாந் தெழுவதைக் காணுயா?

அலையும் கடலில் ஒருகப்பல்—மிக
ஆடி அசைந்தே வருவதுபார்
அலைகள் மோதி அழிவதுபார்!—அவை
ஆணவம் அடங்கிக் கிடப்பதுபார்

கரையில் நிற்கும் நம்காலை—அந்தக்
கடல்அலை தொட்டுச் செல்வதுபார்
விரைவில் வீடு சென்றிடுவோம்—நாம்
மீண்டும் நாளை வந்திடுவோம்.

# இந்தியாவும் கொழும்புத் திட்டமும்

## கொழும்புத் திட்டமும் இந்தியாவும்

கொழும்புத் திட்டத்தை உலகப்பெருந்தலைவர்கள் எல்லாம் உவந்துபாராட்டுகிருர்கள், எனினும், 'கொழும்புத் திட்டம்' என்ருல் என்ன? அதனல் இதுகாறும் விளைந்துள்ள நன்மைகள் யாவை என்பனவற்றை அறியாதவர்களும் பலர் நம்மிடையே இருக்கின்றனர். கொழும்புத்திட்டம் என்ற இக்கட்டுரை திட்டத்தின் அம்சங்களையும், பயனையும் விளக்க உதவும் என்று கருதுகிருேம்.

கொழும்புத் திட்டம் 1950ல் துவக்கப்பட்டது. அன்று முதல் 1960 ஜுன் வரையில் தொழில் நுட்ப உதவிக்காக மொத்தம் 4 கோடி 64 லட்சம் பவுன் செலவிடப்பட்டது.

கொழும்புத்திட்டத்தின் கீழ் நடைபெற்றுவரும் தொழில் நுட்ப ஒத்துழைப்புச் சேவை அத்திட்ட நாடுகளின் பொருளாதார அபிவிருத்தியில் முக்கியபங்கு வகிக்கிறது. நிபுணர்களைத்தந்து உதவியும், பயிற்சி வசதியளித்தும், கருவிகளைக் கிடைக்கச் செய்தும் தொழில்நுட்ப ஒத்துழைப்புக்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

1950 முதல் கொழும்புத்திட்ட நாடுகளும், ஐ. நா. நிறுவனமும் இத்திட்டப் பிரதேசங்களுக்கு சுமார் 1200 நிபுணர்களின் சேவையைத்தந்து உதவி இருக்கின்றன.

## திட்டமும் இந்தியாவும்

கொழும்புத்திட்டம் உருவாவதற்கு முன்பே- அதாவது 1947-ம் ஆண்டுக்கு முந்தியே நமது இந்தியா நீண்டகால அபிவிருத்தித் திட்டங்களில் கவனம் செலுத்தி வந்திருக்கிறது.

## இந்தியாவின் திட்டமுதலீடு

இந்தியா மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தை (1961—66) நிறைவேற்றத்துவங்கிஇருக்கிறது. தேசிய வருமானத்தை ஆண்டு ஒன்றுக்கு 5 சதவிகிதம் முதல் 6 சதவிகிதம் வரை அதிகரிக்க உத்தேசிக்கப்பட்டிருக்கிறது. 10 ஆயிரத்து 200 கோடிக்கும் அதிகமாக மூதலீடு செய்யப்படும். இத்தொகை முதலிரண்டு திட்டங்களின் மொத்த முதலீட்டுத் தொகைக்குச் சமானமாகும். சர்க்கார் நிதியிலிருந்து கிடைக்கும் முதலீட்டுத் தொகையான 6,200 கோடியுடன் நடைமுறைச் செலவுக்காக ரூ. 1050 கோடி ஒதுக்கப்பட்டிருக்கிறது. இரண்டையும் சேர்த்துப் பொதுத்துறையில் 7,250 கோடி ரூபாய் செலவிடப்படும். விவசாயத்துறைக்கு இன்னும் அதிகமான தொகை ஒதுக்கப்பட்டிருக்கிறது. மின்சாரத் துறைக்கும் கணிசமான உதவி கிடைக்கும். விவசாயத்துறை நீங்கலாகப் பிற துறைகளில் மேலும் ஒருகோடிமுதல் 1 கோடி 10 லட்சம் பேருக்கு வேலையளிக்கவேண்டும் என்பதும திட்ட இலட்சியங்களில் ஒன்ருகும். இத்திட்டம் இந்தியாவின் சமூக பொருளாதார இலட்சியங்கள் ஈடேறுவதில் முக்கியமானதொரு கட்டத்தைக் குறிக்கிறது.

பொதுவாக, போதுமான அபிவிருத்தியடையாத நாடுகளுக்கு உதவுவதற்காக மேற்கொள்ளப்பட்டு வருவது கொழும்புத் திட்டம். இத் திட்டம் தொடங்கப்பட்டது முதலே இந்தியா அதில் பங்குபெற்று வருவதோடு நன்மையும் பெற்றிருக்கிறது. இந்தியா வேறு சில அங்க நாடுகளுக்கும் உதவியளித்திருக்கிறது—பொருளாதார வளர்ச்சிக்கும் வசதியளித்திருக்கிறது. கொழும்புத் திட்டத்தின் அடிப்படைத் தத்துவம் கூட்டுறவாகும். கூட்டுறவின் சாரம் சுறுசுறுப்பான நடவடிக்கை. அந்த விஷயத்தில் கொழும்புத் திட்டம் நிச்சயமானதொரு உதாரணமாக விளங்குகிறது.

★

# மோட்டார் சைகிள் எஞ்சின் தயாரிப்பு

திருவொற்றியூர் தொழிற்சாலையில் ஸ்கூட்டர், மோட்டார் சைகிள் எஞ்சின்களைத்தயாரிப்பது பற்றி என்ஃபீல்டு இந்தியா லிமிடெட்டும இங்கிலாந்தில் உள்ள வில்லியர்ஸ் எஞ்சினீயரிங் கம்பெனியும அண்மையில் ஒப்பந்தம் செய்துகொண்டிருக்கின்றன. என்ஃபீல்டு தொழிற்சாலையைச் சேர்ந்த இரண்டு எஞ்சினீயர்கள் வில்லியர்ஸ் தொழிற்சாலையில் பயிற்சிப் பெறுகிருர்கள்.

சைக்கிள்களுக்கு வேண்டிய விசைப்பற்சக்கரங்களை (பிரீவீல்) தயாரிக்க தில்லி ஒக்ளாவிலுள்ள சைகிள் எக்விபெண்ட் (பிரைவேட்) லிமிடெட், வில்லியர்ஸ் எஞ்சினீயரிங் கம்பெனியுடன் ஒப்பந்தம் செய்துகொண்டிருக்கிறது. வில்லியர்ஸ் எஞ்சினீயரிங் கம்பெனி 1904-ம் ஆண்டிலிருந்து சைகிள் விசைப் பற் சக்கரங்களைத் தயாரித்துவருகிறது. வில்லியர்ஸ் தொழிற்சாலை ஆண்டு ஒன்றுக்குச் சராசரியாக 7 கோடி விசைப் பற் சக்கரங்களையும் விவசாயத் துறைக்குப் பயன்படும் 20 லட்சம் டீஸல் எஞ்சின்களையும் தயாரிக்கிறது.

# ஔஷத நீரூற்றுக்கள்

பல நூற்றாண்டுகளாகவே ஜெர்மனியின் ஔஷத நீர் ஊற்றுக்கள் உலகப் புகழ்பெற்று விளங்குகின்றன. மலைகளானாலும் சரி, கடலோரமானாலும்சரி, அடர்ந்த காடுகளின் நடுவேயானாலும் சரி, பெருநதிகளின் கரைப்பகுதிகளானாலும் சரி, இந்த ஔஷத நீர் ஊற்றுப் பிரதேசம் ஆரோக்கிய ஸ்தலமாகவும், விடுமுறை ஸ்தலமாகவும் ஒருங்கே பயன்படுகிறது.

இங்கு வருவோர் இயற்கைக் காட்சிகளைக் கண்டு மகிழலாம்; நோய்க்குப் பின் உடல் தேறுவதற்குச் சிகிச்சை பெறலாம்; மற்ற மக்களுடன் உல்லாசமாகப் பொழுது போக்கலாம்; எல்லாவற்றுக்கும் இங்கே வசதி இருக்கிறது. உடலையும், மனத்தையும் நல்ல நிலைக்குக் கொண்டு வருவதற்குக் கடல் நீரையும், ஔஷத ஊற்று நீரையும் பயன்படுத்துவதில் நெடுங்கால அனுபவமுள்ள வைத்தியர்கள் இந்த ஊற்றுப் பட்டணம் ஒவ்வொன்றிலும் ஆயத்தமாயிருக்கிறார்கள். வருகிற ஒவ்வொருவருக்கும், அவரவருக்குத் தேவையான சிகிச்சை முறையைச் சிபாரிசு செய்து அவரைக் குணப்படுத்தும் பொறுப்பை இந்த வைத்தியர்கள் ஏற்கிறார்கள்.

ஔஷத நீர்கள் மூலம் ஆரோக்கியமளிப்பதும், அருமையான சீதோஷ்ண நிலைமூலம் இதமளிப்பதும் மட்டும்தான் இந்த ஊற்றுப் பட்டணங்களின் நன்மைகள் என்பதில்லை. கொஞ்சமும் குறைவில்லாத சௌகரியம். முழு ஓய்வு, அருமையான பணிவிடை. பலவிதமான பொழுது போக்குக் கேளிக்கைகள்-இப்படி எத்தனையோ அம்சங்கள் இருக்கின்றன. இங்கே வருகிறவர்கள் தமது கவலைகளனைத்தையும் மறந்து, தமது உடலுக்கும், மனதுக்கும் புதுத் தெம்பு பெற்று, அதை வருங்கால வாழ்வுக்குச் சேமித்துவைப்பதும் இந்த வசதிகள் மூலம் சாத்தியமாகிறது.

கவலையற்று ஓய்வெடுத்துக் கொள்வதற்காக இங்கேவருவோர் காடுகள் வழியாக ஒற்றையடிப் பாதைகளில் சுற்றலாம்; கடலோரத்தில் படுத்துக்கிடக்கலாம்; அமைதியாய் உட்கார்ந்து பொழுது போக்குவதற்குப்பூங்காக்கள் இருக்கின்றன; சுகந்தம் நிறைந்த சோலைகளில் தேனீக்கள் ரீங்காரத்தை ரசித்தவாறுநேரம் செல்லுவதில் நினைப்பின்றியும் இருக்கலாம்.

மேற்கு ஜெர்மனியில் இந்த மாதிரி ஊற்றுப் பட்டணங்கள் நிறைய இருக்கின்றன. ஒவ்வொன்றிலும் தகுந்த இடவசதி இருப்பதால் அவரவர் தமது பண வசதிக்கும், அபிவிருத்திக்கும் தக்கபடி எந்த இடத்தையும் தெரிந்தெடுத்துக் கொள்ளலாம். சிலர் தமது குடும்பங்களையும் உடனழைத்து வருகிறார்கள்; குடும்பத்தோடு விடுமுறையைக் கழிப்பதற்கு இந்த ஊற்றுப் பட்டணங்கள் அருமையான இலக்குகளாகும்.

இந்தப் பட்டணங்களில், பூமிக்கடியிலிருந்து வெளிவரும் ஔஷத நீர் உடலுக்கு ஆரோக்கியத்தையும்,வலுவையும் அளிக்கின்றன. பொழுதுபோக்குக்கான இடங்களும், வாசகசாலைகளும் உண்மையான ஓய்வுக்கு நடனக் கச்சேரிகளும் உண்டு. மாலையில் எத்தனையோ விதப்பொழுது போக்குகள் உண்டு.

இந்த ஆரோக்கிய ஸ்தலங்களில் சமூக வாழ்வும், விளையாட்டுக்களும் பல வகைப்பட்டவையாய், ஆனந்தம் நிறைந்தவையாய் இருக்கும். கோடைகாலத்தில் படகுப் போட்டிகள் நடக்கும்; குளிர்காலத்துக்கெனத் தனியாகச் சில விளையாட்டுகள் நடைபெறும். இந்த ஸ்தலங்களிலும், இவற்றைச் சுற்றிலும் நிறைந்திருக்கும் இயற்கைக் காட்சிகள் மனதை மயக்குபவை. அவற்றால் கண்ணுக்கும், கருத்துக்கும் கிடைக்கும் விருந்தையும், அமைதியையும் அளவிட முடியாது.

குறிப்பிட்ட உடல் கோளாறு உள்ளவர்களுக்கு எந்த இடம் சரியாயிருக்கும் என்பதைச் சிபாரிசு செய்வதற்காக வைத்தியர்கள் நெடிய பட்டியல்கள் வைத்திருப்பார்கள். இந்த ஔஷத நீர் ஊற்றுப் பட்டணங்களெல்லாம் ஆரோக்கிய ஸ்தலங்கள் மட்டும் தானா? அவை உல்லாசப் பிரயாண இலக்குகளும் தான். கடைசியாகப் புள்ளி விவரம் தெரிந்திருக்கும் ஓராண்டுக் காலத்தில் மட்டும் இந்த ஊர்களுக்கு மொத்தம் இரண்டு கோடியே ஐம்பத்தொரு லட்சம் உல்லாச யாத்திரிகர்கள் வந்தார்கள் என்றால், இவற்றின் மதிப்பை எளிதாகப் புரிந்துகொள்ளலாம்.



## அமுத வாக்கு

தேச பாஷையின் மூலமாய்ப் பயிற்றப் படாத கல்விக்குத் தேசீயக் கல்வி என்று பெயர் சொல்லுதல் சிறிதளவும் பொருந்தாது.



## மதுரை தமிழ் எழுத்தாளர் சங்கம்

சென்ற ஞாயிறன்று (16-7-61) மாலை, மதுரைத் தமிழ் எழுத்தாளர் சங்கச் சார்பிலே கூட்டமொன்று, விக்டோரியா எட்வர்டு வாசகசாலையின் திறந்த வெளியரங்கிலே நடைபெற்றது. திரு. எஸ். ராமகிருஷ்ணன் தலைமை வகித்தார். மதுரைக் கல்லூரி மொழித்துறைத் தலைவர் திரு. ரா. கிருஷ்ணமூர்த்தி எம். ஏ., எல்.டி., வரவேற்புரை வழங்கினார். "சோவியத் லாண்ட்" ஆசிரியர் திரு. ஓ. பேனுக் "இன்றைய சோவியத் எழுத்தாளர்கள்" என்னும் பொருள்பற்றி அரியதொரு விளக்கமான சொற்பொழிவு நிகழ்த்தினார். பின்னர், கூட்டத்திற்கு வந்திருந்த பலரது வினாக்கட்குத் தகுந்த விடைகளையும் தந்து ஐயப்பாடுகளைப் போக்கினார்.



சிவாஜி

ஊன்றிய கொள்கையும் ஒன்றே கணந்தோறும்
தோன்றும் கடமைகள் ஆற்றுதல் நன்றே

| | | |
|---|---|---|
| ஏடு 26 | 23—7—1961 | வாரம் 37 |

# தொழில் வளர......

தமிழ் நாட்டில் தொழில்வளம் நாளுக்குநாள் பெருகி வருவதை யாரும் மறுக்கமுடியாது தொழில் வளர்ச்சியில் தமிழ் நாடு அரசாங்கம் காட்டிவருகிற அக்கறையை—முன்னேற்றத்தை அறிந்தவர் அனைவருமே பாராட்டுகின்றனர். இப்போது, மூன்றாவது திட்டத்தில் சிறு தொழில் வளர்ச்சிக்கெனத் தமிழ் நாடு அரசாங்கம் 15 கோடி ரூபாய் நிதி ஒதுக்கியிருக்கிறது. இதில் மத்திய அரசாங்கத்தின் உதவி எப்படியிருந்தாலும் எத்தகைய மாற்றமும் ஏற்படாது என்று தொழிலமைச்சர் கனம் வெங்கட்ராமன் அறிவித்திருக்கிறார்.

சிறு தொழில் வளர்ச்சிக்கு இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ஒதுக்கப்பட்டது 5 கோடி ரூபாய்தான். மூன்றாவது திட்டத்தில் அதைவிட 10 கோடி ரூபாய் அதிகம். தமிழகத்தின் சிறு தொழில் வளர்ச்சியைக் காட்ட இதுவே போதுமானது.

இனி, சிறு தொழிலால் என்ன இலாபம் என்று கேட்கலாம். உண்மைதான் குறைந்த முதலீடு கொண்டு, அதனால் அதிகப்படியான பேர் வேலைவாய்ப்புப் பெறுவது நல்லதா? பெரும் முதலீடு செய்து குறைந்த எண்ணிக்கையுள்ள தொழிலாளர்கள் வேலைவாய்ப்புப் பெறுவது நல்லதா? கனரகத் தொழில்களில் பெரிய யந்திரங்களே பெரும்பாலான தொழில்களைச் செய்து விடுகின்றன. இதனால் சில ஆயிரம் பேர்களே வேலைவாய்ப்புப் பெறுவார்கள்.

அடுத்து, கைத்தொழில் பயிற்சித் திட்டத்தின் கீழ், பயிற்சியாளர்களுக்கான திட்டத்தை அமலாக்கத் தமிழ் நாடு அரசாங்கம் 3-வது திட்டத்தில் ரூ 52 லட்சம் ரூபாய் ஒதுக்கியிருக்கிறது. திருச்சிராப்பள்ளி, மதுரை, கோயம்புத்தூர், நெல்லை, சென்னை, சேலம் முதலிய இடங்களில் இத்திட்டத்தின் கீழ் மொத்தம் 2 ஆயிரம் பேர் பயிற்சி பெறுவார்கள். இதனால், தொழிற் பயிற்சி பெற்ற தொழிலாளர்கள் பெரும் அளவில் கிடைப்பது சாத்தியமாகும்.

தொழில் பயிற்சி பெற்ற தொழிலாளர்கள் கிடைக்கிறார்கள். கூட்டுறவுத் துறையிலோ—தனிப்பட்ட முறையிலோ தொழில் துவங்க முன்வருகிறவர்களுக்குத் தேவையான உதவிகளையெல்லாம் தமிழ் நாடு அரசாங்கம் செய்கிறது. தமிழகத்தில் தொழில்கள் சிறந்தோங்க வேறென்ன வேண்டும்?

# உலகப் பயணம்

இந்த வாரம் டுனீசியாவுக்குப் போனேன்; 'மாரீஸ் அம்மானை'க் கண்டேன். இந்த 'மாரீஸ்' அம்மான் பெயரைக் கேட்டதும் 'மாரீசன்—மான்' என்ற நினைவுகள் சிலருக்கு எழக்கூடும். அம்மானை நான் பார்க்கவில்லை. மாரீஸ் அம்மான் என்பவர் பிரெஞ்சுத் தளபதி. அவரைக் கண்டதும், அவர் வெற்றிக் களிப்போடு வெளியிட்ட செய்தி, டுனீசிய நாட்டிலுள்ள பிசெர்டா ராணுவத் தளத்தை பிரஞ்சு ராணுவம் பிடித்துக் கொண்டது என்பதுதான்.

'டுனீசியா ஆப்பிரிக்காக் கண்டத்தில் உள்ள நாடாயிற்றே! ஏற்கனவே 1956 ல் தானே உங்கள் நாட்டு ஆதிக்கத்தில் இருந்து விடுதலையாயிற்று! மீண்டும் அதை என் அடிமைப் படுகுழியில் வீழ்த்தினீர்கள்?' என்று கேட்டேன்.

'நாங்கள் ராணுவ தளத்தை விரிவாக்கும் வேலையில் ஈடுபட்டோம். இதை டுனீசியா கடுமையாக எதிர்த்தது — இடையூறு செய்தது — ராணுவதளத்தை விட்டு வெளியேறும்படி கேட்டு கொண்டது. இதைத்தொடர்ந்து இருநாட்டுப் படைக்கும் மோதல் ஏற்பட்டது' என்றார்.

அது சரிதான்! நீங்கள் செய்கிற காரியங்களில் அவர்கள் தலையிடக் கூடாதுதான். ஆனாலும் உங்கள் நடவடிக்கைகள் அவர்களை பாதிக்கும் போது அவர்கள் ஏனென்று கேட்கவோ, அதனின்றும் தற்காத்துக் கொள்ளவோ முயற்சிப்பது அப்படியொன்றும் பஞ்சமா பாதகமில்லையே' என்றேன்.

அவ்வளவுதான் மாரீச அம்மான் திரிபுரமெரித்த விரிசடைக் கடவுள் போலத் தோற்றமளித்தார். உங்களுக்குத்தான் தெரியுமே, இந்த மாதிரிச் சலசலப்புக்கெல்லாம் நான் அஞ்சிவிடுகிறவனல்ல என்று. பரமனே நெற்றிக்கண் காட்டினாலும் குற்றம் குற்றமே என்ற தமிழ்ப் புலவரைப்பற்றி அவருக்குச் சொல்லி வைக்கலாமென்று நினைத்தேன்.

இரத்த வெறி கொண்டலையும் அவர்களுக்கு இதெல்லாமா ஏறப் போகிறது.

எனவே, அங்கிருந்து நான் கடாங்காவுக்கு விமானத்தில் பறந்தேன். அங்கு போய் இறங்கியதும் நமது ராஜாவைக் கண்டேன். ராஜாவா, என்கிறீர்களா? ஆம் காங்கோவில் இந்தியப் படைகளுக்குத் தலைவராக இருக்கிறாரே நமது தமிழ் நாட்டுக்காரர் பிரிகேடியர் ராஜா அவரைத்தான் கண்டேன். கடாங்காவில் உள்ள உலக நாடுகள் சபைக்குப் புதிய தளபதியாக நியமிக்கப்பட்டுள்ள அவருக்கு எனது மகிழ்ச்சியைத் தெரிவித்தேன். அவர் நன்றி தெரிவித்தார். அங்கிருந்து நேரே தமிழ் நாட்டுக்குப் பறந்து வந்தேன்.

★

## திருச்சியில் பாய்லர் தொழிற்சாலை

செக்கோசுலோவேகிய நாட்டின் உதவியோடு மத்திய அரசாங்கம் தென்னாட்டில் நிறுவ உத்தேசித்திருந்த கனரக மின்சார ஆலைக்கருவித் தொழிற்சாலையை இருகூறாக்கி, ஒன்றைத் திருச்சியிலும், இன்னொன்றை ஆந்திராவிலும் ஏற்படுத்தப் போகிறார்கள் என்று செய்தி வெளியாகியுள்ளது.

திருச்சியில் 'பாய்லர்' தொழிற்சாலை அமையவிருக்கிறது. இதற்கான செலவு ரூ: 12 கோடி. பெரிய யந்திரங்களை ஓட்டுவதற்கு உபயோகிக்கப்படும் பிரம்மாண்டமான பாய்லர்கள் இங்கு உற்பத்தியாகும்.

★

## பாதிக்கப் பட்டோருக்கு 'அம்கோ'வின் உதவி

காவேரி வெள்ளக் கொடுமையினால் அவதிப்பட்ட ஏழை மக்களுக்கு உதவும் பொருட்டு, திருச்சி இம்பீரியல் டிரேட்ஸ் அதிபர் அம்கோ சொக்கையா ரூ. 101-க்கு செக் ஒன்றை திருச்சி மாவட்ட கலெக்டருக்கு அனுப்பிவைத்தார்.

★

## அரியலூர் டி.மு. கோர்ட்

O. S. No. 126/61

சடைய படையாச்சி —வாதி

சின்னத்தம்பி படையாச்சி —1ம் பிரதிவாதி

ஷெ செம்பரில் வாதி தாவா ஜட்ட சொத்துக்களில் வாதியின் கிரயதார் ரா. சடைய படையாச்சியின் பாகம் 1/3 ஐ 'தான்' கிரயம் பெற்றிருப்பதை பிரித்து சுவாதீனம் கிடைக்கவும் Past mesne profits இதர பரிகாரங்கள் ரூ. 225ம் கிடைக்கவும் செய்த தாவா 27-7-61ல் ஈரங்கி. அன்று ஆக்ஷேபனையை தெரிவிக்கலாம்

T. V. வெங்கட்ராமன்
அட்வகேட்

3/4343/100

## திருச்சி டி.மு.கோ.

S.C. 486/1961

J.C. ஜோஷீவா —வாதி

கோவிந்தம்மாள் alias கேசம்மாள் 1, முத்துராஜர் 2.

—பிரதிவாதிகள்

6-2-1960ல் புரோநோட்டின் பேரில் ஷெ சூட் 31-7-61 ல் விசாரணை அன்று பிரதிவாதிகள் ஆக்ஷேபனையை தெரிவிக்கத் தவறினால் ஒரு தலைப்பட்சமாக தீர்மானிக்கப்படும்.

K.M. பிஜிலி
அட்வகேட்

2/4341/99

## அரியலூர் டி. மு. கோ.

O. P. 51/61

உ.தா.குலமாணிக்கம் கிராமத்திலுள்ள சவுரிமுத்து மனைவி இன்னாசி அம்மாள் —மனுதாரி

ஷெ மனுதாரி உ. தா. குலமாணிக்கம் கிராமத்தில் இறந்த மதலைமுத்து சேர்வைக்கு வரவேண்டிய மனுவில் கண்ட புரோநோட்டு கடனை அயிட்டம் என்கிற இன்னாசிமுத்து சேர்வை எழுதிக் கொடுத்த பாண்டில் வரவு போக பாக்கி ரூ.420-யும் வசூலித்தடைய வார்சு சர்டிபிகேட் கோரி மனுதாரி கொடுத்த மனு 14—8—61-ல் ஈரங்கி. ஆக்ஷேபனையைத் தெரிவிக்கலாம்.

R. ரெகுநாதாசாரியார்
அட்வகேட்

4 | 4344 | 101

## ஆலைகளும் கை வேலைகளும்

'மூன்றாவது திட்ட காலத்தில் சிறு தொழில் வளர்ச்சிக்காகத் தமிழ் நாடு அரசாங்கம் 15 கோடி ரூபாய் ஒதுக்க உத்தேசித்துள்ளது. மத்திய உதவி எப்படி இருந்தபோதிலும் இந்தத் தொகை ஒதுக்கப்பட்டேயாகும் என்று அண்மையில் நமது தொழில் அமைச்சர் திரு. ஆர். வெங்கட்ராமன் குறிப்பிட்டிருக்கிறார்.

ஆனாலும் 'இங்கென்னவோ, வடக்கு வளர்கிறது—தெற்கு தேய்கிறது. வடக்கு தெற்கை வஞ்சிக்கிறது. பெரும் பெரும் அணைகளும் ஆலைகளும் அங்கே—பெயருக்கு இரண்டொன்று இங்கே' என்று உரத்த குரலிலே பேசிப் பழகியவர்கள் அதைத் திரும்பத் திரும்ப ஒப்புவித்துக் கொண்டுதான் வருகிறார்கள். அப்பாவிப் பாமரர்கள் சிலரும் அவர்களின் மாரீசப் பேச்சிலே மயங்கிக் கிடக்கின்றனர்.

இந்த மயக்கத்தைத் தெளிவிக்கும் நல்ல மருந்து திரு. கோ. செல்வன் எழுதிய ஆலைகளும் கைவேலைகளும். விலை 25 காசு தமிழ் நாடு காங்கிரஸ் கமிட்டி, சென்னை—6.

## சிதம்பரம் டி. மு. கோ.

O. S. 135/61

சிதம்பரம் தாலூகா பழஞ்சநல்லூர் வெங்கிடாஜல தோதாரியார் குமாரர் தங்கசாமி தோதாரியார் --வாதி

அரியலூர் டி. மு. இலாகா பாப்பாகுடி வட்டம் மேலணிக்குழி சின்னசாமி படையாச்சி குமாரர் பழனிவேல் படையாச்சி

—பிரதிவாதி

வாதிக்கு பிரதிவாதி 1-1-58ல் ரூ. 500-க்கு எழுதிக் கொடுத்திருக்கும் பிராம்சரிநோட்டின் அசல் வட்டி ரூ. 582-50-க்கு தாவா செய்து 31—7—61-ல் ஈரங்கி. அன்று ஆக்ஷேபனையை தெரிவிக்கத் தவறினால் ஒரு தலைபட்சமாக தீர்ப்பு செய்யப்படும்.

V. V. ஸ்வாமிநாதன்
அட்வகேட்

5 | 4346 | 102

## எங்கள் தமிழ் வெளியீடுகள்

| | | விலை |
|---|---|---|
| மகாத்மா காந்தி (போட்டோ கோவை) | ... | 10—00 |
| விஞ்ஞானத்தின் சில அம்சங்கள் (டாக்டர் சி. வி. ராமன்) | ... | 1—75 |
| எஸ்டேட் வரி (வெகுஜன வெளியீடு) | ... | 1—25 |
| பாரத நாட்டுக் கிராமியக் கதைகள் | ... | 1—00 |
| வெளிநாட்டுக் கிராமியக் கதைகள் | ... | 0—75 |
| இந்திய அரசியல் அமைப்பு | ... | 0—75 |
| தீ, ஜாக்கிரதை | ... | 0—75 |
| ஆதி வாசிகள் | ... | 0—50 |
| மெட்ரிக் அளவை முறை | .. | 0—35 |
| பஞ்ச சீலம் | ... | 0—35 |
| தீண்டாமை ஒழிப்பு | ... | 0—25 |
| நோயற்ற வாழ்வு | ... | 0—25 |
| பாரதப் பண்பாடு (சர்தார்பணிக்கர், ஹுமாயூன்கபீர்) | | 0—20 |
| ஆதாரக் கல்வி (வினா விடைகள்) | ... | 0—20 |
| மது விலக்கு (வினா விடைகள்) | ... | 0—10 |
| ஜனநாயக அரசாங்க ஊழியர் (பண்டிதபந்த்) | | 0—06 |

ரூ. 25/–ம் அதற்கு மேலும் புத்தகம் வாங்கினால் தபால் செலவு தள்ளுபடி. ரூ. 25/–க்கு குறைவாக வாங்கும் புத்தகங்களின் விலையுடன் தபால் செலவு $12\frac{1}{2}$ சதவீதம் கூட்டிக்கொள்ளவும். குறைந்த பட்சத் தபால் செலவு 10 ந.பை. ரிஜிஸ்தர் செலவு தனி.



**பப்ளிகேஷன்ஸ் டிவிஷன்**

டில்லி ; பழைய செக்ரடேரியட்
சென்னை : 8, ஸாந்தோம் ஹைரோடு.

D A – 60/236.

The Shivaji Tamil Weekly. 23 7 61

**அடுத்த வாரம்**

**'சிவாஜி' வெள்ளி விழா மலர்**

**வெளிவரும்.**



# எனது இலக்கியப் படகு

—திருலோகசீதாராம்

## கால காரணம்

ஒவ்வொரு கணமும் உலகில் கோடி கோடியாக ஜீவராசிகள் தோன்றுகின்றன மறைகின்றன. தோற்றம் அதிகமா, மறைவு அதிகமா? ஆண்டு தோறும் பெருகிவரும் ஜனத்தொகை, தோற்றம் தான் அதிகம் என்பதைக் காட்டுகிறது. மரணத்தை வென்று நிலைக்கும் முயற்சியில் உயிர்ச்சக்தி முன்னேறி வருகிறது என்று இதைக் கொள்ளலாமோ!

எப்படியும் உயிர் ஒரு பேரதிசயம்தான். தோட்டத்தில் நாம் நட்ட விதை முளைவிட்டாலும், பதினாருவதாக நம்முடைய வீட்டில் ஒரு குழந்தை பிறந்தாலும், நமது வீட்டின் பூனை குட்டி போட்டாலும் நமக்கு ஏற்படுகின்ற மகிழ்ச்சி ஒரே கணக்குத்தான்.

"பிணங் கொண்டிங்கு காட்டுய்ப்பார் கண்டும் மணங்கொண்டு இங்கு உண்டு உண்டு என்னும் உணர்வினால் சாற்றுமே டொண் டொண் டொண் என்னும் பறை" என்று நீதி நூல்கள் உயிர்த்தத்துவத்தின்மீது மனிதன் கொண்டுள்ள நம்பிக்கையை—ஆவலை வியக்கின்றன!

குழந்தை பிறந்தால் மகிழ்ச்சி, பத்து நாள் ஆகிவிட்டால் கொண்டாட்டம், ஒரு வருஷம் முடிந்தால் திருவிழா, ஆண்டு தோறும் பிறந்த நாள் விழா, பின்னர் அறுபதாங் கல்யாணம், சதாபிஷேகம், சகஸ்ராபிஷேகம். இவ்வளவு நாள் வாழ்ந்துவிட்டது அதிசயமல்லவா என்ற மகிழ்ச்சியில், வெற்றிக் களிப்பில் துள்ளுகிறோம்.

ஒருவர் மறைந்து விட்ட பிறகும் நாம் உயிரின் தோல்வியை ஒப்புக்கொள்ள விரும்புவதில்லை. நினைவு நாள் கொண்டாடி அப்படி ஒருவர் பிறந்தார், பிறந்திருந்தார் என்ற உண்மையை வலியுறுத்திப் பாராட்டுகிறோம். மேலோர்கள், மேதைகள், நூலோர்கள் இவர்களின் நினைவுக்கு எத்தனை நூற்றாண்டு விழாக்கள் கொண்டாடி வருகிறோம்.

உயிர் ஓர் அதிசயம்!

எந்த ஒரு தொடக்கமும் ஒரு ஜீவசக்திதான், எந்த ஒரு நிகழ்ச்சியும் ஜீவவிளக்கம்தான். போர் வெற்றியின் நினைவும், தேச விடுதலைப் போர் தொடங்கிய நாளும் சுதந்திரத் திருநாளும் கொண்டாடும் போதெல்லாம் இந்த ஜீவ சக்தியின் மேன்மைக்குத்தான் விழா எடுக்கிறோம்.

தோற்றம் ஒரு அதிசயம்! தொடர்ந்து இருந்து விட்டால் இருக்கின்ற நாளெல்லாம் அதிசயம்! சென்றுவிட்ட நாட்களை இறந்த காலமென்பது தப்புக் கணக்கு. அவை நம்முடைய வாழ்வில் சேர்ந்துவிட்ட நாட்கள் என்பதுதான் உண்மை.

சிவாஜி தோன்றியது 1935-ல் வெள்ளி விழாக் கொண்டாடுவது 1961-ல். உண்மையில் 1960 டிசம்பரிலேயே கொண்டாடியிருக்க வேண்டும். 1961 முழுவதும் வெள்ளி விழா ஆண்டுதானே என்பதனாலும், மற்றும் பல காரணங்களாலும் இந்த வாரம் விழா நடைபெறுகிறது.

சென்னைக்குத் தெற்கே இப்படிக் கால் நூற்றாண்டு இடைவிடாமல் ஒழுங்காய் வெளிவந்த ஒரு பத்திரிகை சிவாஜியென்பது ஒரு உண்மை. இதை நான் தோற்றுவிக்காவிட்டாலும், வெள்ளி விழாக் கொண்டாடுகின்ற உரிமை என்னிடம் இருக்கிறது. தவிர இதை நானே பதினாறு ஆண்டுகளுக்குமேல் நடத்தியிருக்கிறேன்.

நண்பர்கள் இதை என்னுடைய வெற்றியென்று பாராட்டுகிறார்கள். நான் இதை அதிசயமென்றும் அதிர்ஷ்டமென்றும் கொள்கிறேன்.

காரண காரியம் விளங்காமல் இருக்கிற செய்திகள், நிகழ்ச்சிகள் யாவும் அதிசயம். காரண காரியம் தெரியாமல் நமக்கு வருகின்ற சுகமெல்லாம் அதிர்ஷ்டம்.

100 வருஷங்கள் எப்படி நீங்கள் வாழ்ந்திருக்கிறீர்கள் என்று சிரஞ்சீவிகளாக விளங்கும் பெரியார்களிடம் நிருபர்கள் பேட்டி கண்டு விசாரிக்கிறார்கள். அவர்களும் ஏதோ இதற்கு ஒரு காரணம் சொல்லித்தான் ஆகவேண்டும் போல் இருக்கிறது என்று எண்ணிக்கொண்டு—"தினசரி நான் ஆறு மணிக்குப் படுக்கையை விட்டு எழுந்திருப்பது, ஆட்டுப் பால் சாப்பிடுவது, யோகாசனம் பண்ணுவது" என்று குறிப்பிட்டு நூறாண்டு வாழும் ரகசியம் ஒன்றைச் சொல்லியாக வேண்டியிருக்கிறது. எமன் ஏமாந்து போனான் என்று பதில் சொன்னால்தான் உண்மையாக இருக்கும்.

'சிவாஜி'யின் வாழ்வுக்கு இப்படி ஏதாவது காரணம் கூறி அதைப் பின்பற்றுமாறு சொல்லலாமா என்று நானும் யோசித்துப் பார்த்தேன்.

"அன்பர்களும், நண்பர்களும் நான் மேற்கொண்டுள்ள பணி நல்ல திருப்பணி என்று ஏற்றுக்கொண்டு உதவி வந்தார்கள். அதனால் இது சாத்தியமாயிற்று" என்று கூறுவதற்கு மேல் திறமையென்று சாதிப்பதற்கு என்னிடம் எதுவுமில்லை.

சிவாஜியின் லட்சிய வாசகத்தை வாரந்தோறும் தலையங்கப் பத்தியில் பார்த்திருப்பீர்கள்.

"ஊன்றிய கொள்கை ஒன்றே—கணந்தொறும் தோன்றும் கடமைகள் ஆற்றுதல் நன்றே" என்பதுதான் அது. அவ்வப்போது என் முன்னால் வந்து நிற்கும் காரியங்களைத் தட்டிக்கழிக்காமல், ஒத்திப்போடாமல் செய்து வந்திருக்கிறேன். சிவாஜியும் காலந் தவறாமல், நின்றுபோகாமல் நிலைத்து வந்திருக்கிறது. இனியும் இப்படிச் சேநங் காலமெல்லாம் எனது வாழ்வின் காலமாக இருக்கும்.

பாரதியின் பெருமை உலகமெங்கும் பரவவேண்டும். அதற்கு நான் பயன்படவேண்டும். எனக்குத் தமிழ் நாட்டார் துணை நிற்க வேண்டும். இது ஒன்றே என்னுடைய ஆசை. இந்த ஆசையின் கருவி சிவாஜி. என்னுடைய ஆசையை ஆமோதித்து சிவாஜியை ஆசீர்வதிக்க ஆண்டவன் அருளை வேண்டுகிறேன்.

★

## தமிழ் மொழியின் தனிச் சிறப்பு

உலகில் அகத்துறை, புறத்துறை இலக்கியங்களிற் சிறந்து விளங்கும் தமிழ் மொழிக்கு ஈடு இணை கூற முடியாதென்றும், பல ஆண்டுகளாக எழுந்த எண்ணற்ற இலக்கியச் செல்வங்கள் அம்மொழியை அலங்கரித்து வருகின்றன என்றும் இந்திய அரசாங்கக் கல்வித் துறையைச் சேர்ந்த திரு. ஆர். ரங்கராஜன் டில்லி தமிழ்ச் சங்கத்தில் "இயற்றமிழ்" என்ற தலைப்பில் நிகழ்த்திய ஒரு சிறப்புச் சொற்பொழிவில் குறிப்பிட்டார். இக்கூட்டத்திற்கு இந்திய விவசாய ஆராய்ச்சிக் கழகத் தமிழ் வெளியீட்டுத்துறை ஆசிரியர் திரு. எம். எஸ்பி. சண்முகம் தலைமை வகித்தார்.

அகத்துறைக்கு நூலும், அதற்கு இலக்கணமும் கண்ட பெருமையும் பக்திநெறியில் பல்லாயிரம் பாக்களைக் கொண்ட பெருமையும் தமிழ்மொழி ஒன்றுக்கே உண்டென்றும் இந்தச் சிறப்பானது உலகில் வேறெந்த மொழிக்கும் இல்லையென்றும், தலைவர் தமது தலைமை உரையில் குறிப்பிட்டார். டில்லி பல்கலைக்கழகத் தமிழ்ப் பேராசிரியர் திரு. சாலை இளந்திரையன் பேசுகையில் அகத்துறை இலக்கியத்தில் தமிழ்ப் பண்பாட்டைவெளிப்படுத்தும் ஒரு பாடலை எடுத்துக்கூறி அந்தப் பாடலிற் கண்ட பண்பாடு எப்படி ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளாக ஒரே பொன் இழையிற் கோத்த ஆபரணம் போலப் பிற்காலச் சமயப் புலவர்கள் பாடலிற் கூட விளங்குகின்றதென்பதை அழகாக விளக்கினார். செயலாளர் திரு. ஆர். எஸ். வெங்கடேசன் நன்றி கூறினார். *

## பீங்கான் பாண்டத் தொழிற்சாலை

கழிவு தொட்டிகள், தட்டங்கள் முதலிய பீங்கான் பாண்டங்களைத் தயாரிப்பதற்காக புதுடில்லியில் ஹிந்துஸ்தான் ட்வீஃபோர்ட்ஸ் லிமிடெட் என்ற பெயரில் ஒரு தொழிற்சாலை நிறுவப்படும். பீங்கான் பாண்டங்களைத் தயாரிப்பதில் புகழ்பெற்ற ட்வீஃபோர்ட்ஸ் லிமிடெட் என்ற பிரிட்டிஷ் நிறுவனம் இதில் 26 சதம் முதலீடு அக்கறையுள்ளது. தொழில்நுட்ப போதனை, பயிற்சிப் பொறுப்புகளை பிரிட்டிஷ் நிறுவனம் ஏற்றுக்கொண்டிருக்கிறது. புதுடில்லித் தொழிற்சாலையில் அடுத்த ஆண்டு வாக்கில் உற்பத்தி தொடங்கப்படும். *

மேனாட்டுப் புதுமை:

# திசைகாட்டும் செயற்கைக்கோள்

★

டிரான்சிட் என்னும் அமெரிக்கச் செயற்கைக் கோள் ஒன்று விண்வெளியில் பூமியை வலம் வருகிறது; கடலில் செல்லும் கப்பல்கள் வானிலை எப்படியிருந்தபோதிலும் திசை தடுமாறாமல், செயற்கைக் கோள்களின் உதவியால், தமது இருப்பிடத்தைச் சரிவர உணர்ந்து செல்லக்கூடிய காலம் வரும் என்பதற்கு டிரான்சிட் ஓர் அறிகுறியாகும்.

புளோரிடா மாநிலத்தில் கனவரால் முனையிலிருந்து செலுத்தப்பட்ட ஆற்றல் மிக்க இரண்டு கட்டங்கள் கொண்டதோர் — ஏபில்-ஸ்டார் ஏவுகணை ஏற்றிச் சென்ற மூன்று செயற்கைக் கோள்களில் முக்கியமானது டிரான்சிட்தான்.

மூன்றில் இன்னொன்றின் பெயர் "கிரெப்." இது டமாரம் போன்ற வடிவுடையது. வானொலி ஒலிபரப்புக்களைச் சூரியப் புள்ளி நிகழ்வுகள் எவ்வாறு பாதிக்கின்றன என்பதை ஆராயும் நோக்கம் கொண்டது. மூன்றாவது கோளின் பெயர் "இஞ்சன்". இது உருண்டை வடிவமுள்ளது. வடதுருவ முனையை ஒட்டி விண்ணில் கிளர்ந்து தெரியும் வடபால் வெளிச்சத்தை ஆராய்வது இது.

கடற்படை நடவடிக்கைகளின் துணைத் தலைவர், துணை அட்மிரல் ஜே. டி. ஹேவர்டு வாஷிங்டனில் நடந்த பத்திரிகையாளர் மகாநாட்டில் பேசுகையில் டிரான்சிட் கோள் வெற்றிகரமாக விண்ணில் வலம் வருவதும் அதிலிருக்கும் சிறந்த மின்னணுக் கருவிகளும் 1 6 பிற்பகுதிக்குள் கப்பல் போக்குவரத்துக்குச் செயற்கைக் கோள்களைப் பயன்படுத்தி எல்லா வகையான வானிலைகளிலும் உதவலாம் என்ற நம்பிக்கையை வளர்ந்துள்ளன என்றார்.

இந்த டிரான்சிட் சோதனைக்காகவே அனுப்பப்பட்டுள்ளது. கப்பல் போக்குவரத்துக்குத் துணை செய்யும் ஏற்பாட்டில் நான்கு டிரான்சிட் செயற்கைக் கோள்கள் பூமியை வலம் வந்துகொண்டிருக்கும்.

அந்த ஏற்பாடு வருங்காலத்தில் கடலில் செல்லும் கப்பல்களுக்கு அவற்றின் போக்குவரத்துக்கு வேண்டிய தகவல்களைக்கொடுத்து உதவும். ஒவ்வொரு டிரான்சிட் செயற்கைக் கோளிலும் மின்னணுக் கருவிகள் பல இருக்கும்; பூமியிலிருந்து அனுப்பும் தகவல்களைச் சேர்த்துவைக்கும் "நினைவுக் கருவி" ஒன்றும் இருக்கும். மின்னணு முறையில் செயற்கைக் கோளுடன் தொடர்பு கொள்ளும் கப்பலுக்குத் தகவல்கள் கிடைக்கும்; அவை தாமாகவே ஒரு கருவி மூலம் அக்கப்பல் இருக்கும் இடத்தின் அட்ச ரேகை, தீர்க்க ரேகைகள் என்ன என்று தெரிவித்துவிடும். இவ்வாறு எல்லாக் காலங்களிலும் கப்பல் போக்குவரத்துக்கேற்ற இச்செயற்கைக் கோள் திட்டத்தை நடத்தும் அமெரிக்கக் கடற்படை ஒவ்வொரு செயற்கைக்கோளின் எடையையும் 90 ராத்தலாகக் குறைக்க முயன்றுவருகிறது என்று ஹேவர்டு தெரிவித்தார்.

இன்று விண்ணில் வலம் வரும் டிரான்சிட் முந்திய டிரான்சிட் கோள்களைவிட இரு மடங்கு இலேசானதாகும்.

ஜான்ஸ் ஹாப்கின்ஸ் பல்கலைக் கழகத்தின் பயன்துறை பௌதிக ஆய்வுக் கூடமே டிரான்சிட் கோளின் உரு அமைப்பைத் தோற்றுவித்தது. அந்த ஆய்வுக்கூடத் தலைவர் டாக்டர் ஆர்.பி. கெர்ஷ்னர் அக்கோளிலுள்ள அணு மின் கலம் மின்விசை பெறுவதற்கு மிகவும் நல்ல சாதனமாகக் கருதப்படுவதாகக் கூறுகிறார்.

முந்திய அமெரிக்கச் செயற்கைக் கோள்களில் இரசாயன மின்கலங்களையும் வெய்யில்விசை மின்கலங்களையுமே பயன்படுத்தினர்.

புதிய மின்கலத்தின் எரிபொருள் புளூட்டோனியம்-238 என்னும் உலோகத்தின் ஒரு சின்னஞ் சிறிய துண்டுதான். இதிலிருந்து வரும் கதிரியக்கமே மின்விசை பிறப்பிக்க உதவுகிறது. இது பல ஆண்டுகளுக்கு வரும்.

செயலாற்றக்கூடியகோள்களை விடுவதற்கு முன்பு இன்னும் இரண்டொரு கோள்களைச் செலுத்திச் சோதனை செய்யக்கூடும் என்றார் ஹேவர்டு.

அமெரிக்காவின் புத்தம் புதிய செயற்கைக் கோள்கள் மூன்றும் ஒரே ஏவுகணையில் வைத்து அனுப்பப்பட்டன; பின்னர் அவை தனித்தனியே பிரிந்தன. அவை பூமியை வலம் வரும் பாதைகள் கிட்டத்தட்ட வட்ட வடிவமாக உள்ளன.

அவை பூமிக்குக் கிட்ட வரும்போது 550 மைல் உயரத்திலும் எட்ட இருக்கும்போது 625 மைல் உயரத்திலும் உள்ளன.

மூன்று செயற்கைக் கோள்களிலுமிருந்து தகவல்கள் கிடைத்து வருவதாக அதிகாரிகள் தெரிவிக்கிறார்கள்.

★

## அமெரிக்க நாவலாசிரியர்

# ஏர்னெஸ்ட் ஹெமிங்வே

2-7-61-ல் தமது இல்லத்தில் காலமான ஏர்னெஸ்ட் ஹெமிங்வே இன்றைய நாவலாசிரியர்களில் மிகச் சிறந்து விளங்கிய ஒருவர். ஹெமிங்வேயும் வில்லியம் பாக்னரும் அமெரிக்காவின் இன்றைய இருபெரும் நாவலாசிரியர்கள் என்று பொதுவாகப் பாராட்டப் படுபவர்கள்.

ஹெமிங்வே 1954-ல் இலக்கிய நோபல் பரிசு பெற்றவர். ''கிழவனும் கடலும்'' என்ற நாவலுக்காக அப்பரிசு வழங்கப் பெற்றது. அதே நாவல் 1953-ல் அவருக்கு புலிட்ஸர் பரிசு பெற்றுத் தந்தது. இது அமெரிக்க இலக்கிய உலகில் கிடைக்கக்கூடிய மிக உயரிய பரிசாகும். தோல்வி, ஏமாற்றம் இவையே அவர் கதைகளிலெல்லாம் முடிவாகத் தெரியும். ஆனல் "கிழவனும் கடலும்'' முற்றும் வேறுவிதமான நாவல். அது ஒரு சிறிய கதை. அமைதியான முறையில் ஆசிரியர் அக்கதையைக் கூறியிருக்கிறர். கியூபாவைச் சேர்ந்த முதுமை வாய்ந்த மீனவர் ஒருவரைப் பற்றியும் மூன்று நாளாக அவர் ஒரு மாபெரும் மீனுடன் பட்ட பாட்டைப் பற்றியும் கதை சொல்கிறது. விளையாட்டையும் போட்டியையும் விரும்பும் ஹெமிங்வேயின் மனப்பான்மையை இங்கும் காணலாம். ஆனல் கதைக்கு வழக்கம் போன்ற முடிவு இல்லை. கதை நம்பிக்கையில் முடிகிறது., மேகத்தைக் கிழித்துக் கொண்டு கதிரவன் வெளி வந்தது போல.

61 வயதான ஹெமிங்வே கடந்த பல மாதங்களாக இரத்த அழுத்தம் மேலிட்டு மேயோ மருத்துவ விடுதியில் சிகிச்சை பெற்று வந்தார். வீடு திரும்பிய பின்னர் இவர் துப்பாக்கியைத் துடைத்துக் கொண்டிருக்கும்போது குண்டு பாய்ந்து காலமானர். இவர் மருத்துவ விடுதிக்குச் செல்லுமுன் புதிய நாவல் ஒன்றை எழுதி முடித்திருந்ததாகத் தெரிகிறது.

1961-ல் 17-வது வயதில் ஹெமிங்வே ''கான்சாஸ் ஸிட்டி ஸ்டார்'' என்ற பத்திரிகைக்கு நிருபராக வேலை பார்க்கலானர். 18-வது வயதில் தந்தை தடுத்தும் கேளாமல், அவர் முதல் உலகப் போரில் இத்தாலியில் ஓர் அவசர மருத்துவ மோட்டார் வண்டி டிரைவராகப் போனர்.

போரில் படுகாயமடைந்த ஹெமிங்வே, போர் முடிந்த பின் பத்திரிகைகளுக்குப் பல கதைகள் எழுதி இலக்கியப் படைப்புப் பற்றிச் சிறிது கற்றர். எழுதி அனுப்பியவை ஏற்றுக்கொள்ளப் படாமல் திரும்பிவந்த அனுபவமும் அவருக்கு உண்டு. 1920-ம் ஆண்டுக்குப் பிறகு ''ஸ்டார்'' பத்திரிக்கைக்காக அவர் பாரிஸ் சென்றர். அங்குதான் அவர் தமக்கு உகந்தது பத்திரிகைத் தொழில் அல்ல, இலக்கிய உலகமே என்று உணர்ந்தார். அச் சமயம் அவர் ஷெர்வுட் ஆண்டர்சன் என்ற அமெரிக்க நாவலாசிரியருக்கு எழுதிய கடிதத்தில் ''இந்தப் பத்திரிகை எழுத்து என்னைப் படிப்படியாய்ப் பாழாக்குறது'' என்று எழுதினர்.

24-வது வயதில் இவர் சிறு கதைகள் சில வெளியிட்டார். தாம் எழுதியதைத் திரும்பத் திரும்ப அடித்து எழுதுவதும், வார்த்தை விடாமல் பக்கம் பக்கமாகப் படித்துத் திருத்துவதும் இவருக்கு இயல்பாயின.

இவருடைய நடை நறுக்குத் தறித்தாற் போல் இருப்பதும் இதனல்தான். இவருடைய நடையைப் பின்பற்ற முயலும் எழுத்தாளர் பலர் ஏற்பட்டார்கள்.

ஹெமிங்வே நாவல்களில் பெரும்பாலானவை சொந்த அனுபவத்தை வைத்துப் பின்னியவையாகும். இவர் கதாநாயகர்களிலும் பலர் ஹெமிங்வே என்று சொல்லும்படியாக உள்ளனர்.



(2-ம் பக்கத் தொடர்ச்சி)

சதவிகிதம் முந்திரி எண்ணெயை கலந்து, கொசு ஒழிப்பு நடவடிக்கைகளுக்கான சிறந்த பூச்சி நாசினியைத் தயாரிக்கலாம் என்று கண்டு பிடிக்கப்பட்டிருக்கிறது.

வறுத்த முந்திரிப் பருப்பையும், உப்பிட்டுப் பக்குவம் செய்யப் பட்ட முந்திரிப்பருப்பையும்நீண்ட காலம் கெடாமல் பாதுகாத்து வைப்பதற்கான முறைகளை மைசூரிலுள்ள மத்தியஉணவுத் தொழில் நுட்ப ஆராய்ச்சி நிலையம் கண்டு பிடித்திருக்கிறது.

## கவியரசர் தாகூர் நூற்றாண்டு விழா

### சமாதானக் குழு

அண்மையில் சென்னை உட்லண்ட்ஸ் ஹோட்டலில் கலை இலக்கிய துறையில் பணியாற்றும் பிரமுகர்கள் கூட்டமொன்று நடைபெற்றது. அவ்வமயம் வருகிற நவம்பரில் நடைபெற இருக்கும் கலை இலக்கிய விழாவின் நோக்கங்களை விளக்கிப் பலர் பேசியபின், நடைமுறைஅலுவல்களைக் கவனிப்பதற்காக தமிழ்நடிகர் எஸ். வி. சகஸ்ரநாமம் தலைமையில் ஒரு செயற்குழு அமைக்கப்பட்டது.

டாக்டர் மு. வ., டாக்டர் அ. சி. செட்டியார், கலைஞர் டி. கே. சண்முகம், பன்மொழிப் புலவர் கா. அப்பாத்துரை, ப. ஜீவானந்தம், கொடுமுடி ராஜகோபாலன் ஆகியோரும் வேறுபலரும் செயற்குழு உறுப்பினர்களாக நியமிக்கப் பெற்றனர்.

### காமராஜர் மணி விழா

சென்னை கன்னியா குருகுலத்தின் ஆதரவில் நடைபெற்ற ஒருகூட்டத்தில் தமிழ்நாடு முதலமைச்சர் காமராஜரின் மணிவிழாவைச் சிறப்புறக் கொண்டாட முடிவுசெய்து அதற்கென விழாக் குழு ஒன்றும் த.நா.கா.க. தலைவர் ஓ. வி. அளகேசன் தலைமையில் அமைக்கப்பட்டது.

திருவாளர்கள் எ.கே. சந்திரசேகர முதலியார் கே.ராமதாஸ்,டாக்டர் பி. சீனிவாசன் ஆகியோர் உப தலைவர்களாகவும், திரு. பி. பி. எம். தனுஷ்கோடி நாடார், திருமதி சரஸ்வதி பாண்டுரங்கம் காரியதரிசிகளாகவும், திரு. கே. கமலக்கண்ணன் பொருளாளராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

திருவாளர்கள் கே. டி. கோசல்ராம், ராஜா எம். ஏ. முத்தைய செட்டியார், ம.பொ.சி; எஸ். டி. சுந்தரம், திருமதிகள் கோபால் ரத்தினம், அனந்தநாயகி, அம்புஜத்தம்மாள் ஆகியோரும் வேறு பலரும் குழு அங்கத்தினர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

### கலைஞர்களுக்குப் பாராட்டு

அண்மையில், குடியரசுத் தலைவர் விருதுபெற்ற கலைஞர் முடிகொண்டான் வெங்கடராமய்யர், சங்கீத நாடக சங்கத்தின் பரிசுகள் பெற்ற திருவாளர்கள் எப்.ஜி. நடேசய்யர், நவாப் டி. எஸ். ராஜமாணிக்கம், எஸ்.வி. சகஸ்ரநாமம், திருமதி எம்.எஸ். திரௌபதி ஆகியவர்களைப் பாராட்ட சென்னை ரசிக ரஞ்சனி சபா மண்டபத்தில் அமைச்சர் திரு. பக்தவத்சலம் தலைமையில் நடைபெற்றது. அவர்களுக்கு அளிக்கப்பெற்ற பாராட்டுக்கு திருவாளர்கள் வெங்கட்ராமய்யரும், எஸ்.வி. சகஸ்ரநாமமும் நன்றி கூறினர்.

திருச்சியில்

### வெள்ள நிவாரணத் தலைமை அலுவலகம்

திருச்சிராப்பள்ளி, தஞ்சாவூர், சிதம்பரம் ஆகியவிடங்களில் வெள்ளப் பெருக்குகளைச் சமாளிப்பதற்காக சென்னையிலிருந்தும், பங்களூரிலிருந்தும் எஞ்சினீயரிங் உதவி சாதனங்களுடன் மேலும் அதிக அளவில் துருப்புகள் அனுப்பி வைக்கப்பட்டிருக்கின்றன. இந்தத் துருப்புகள் திருச்சிராப்பள்ளிக்கு அருகாமையில் கொள்ளிடம் ஆற்றில் ஏற்பட்டுள்ள மூன்று பெரிய உடைப்புக்களை அடைப்பதில் முழுமூச்சுடன் நடவடிக்கையெடுத்து வருகின்றன. திருச்சிராப்பள்ளியிலிருந்து பன்னிரண்டு மைல் தூரத்தில் உள்ள கல்லணைக்குக் கீழ்ப் பகுதியில் 100 அடி தூரத்துக்கும், லால்குடி தாலூக்காவில் கொள்ளிடம் ஆற்றின் வடகரையில் 60 அடி தூரத்துக்கும், திருச்சிராப்பள்ளியிலிருந்து சுமார் 60 மைல் தெற்கே சுமார் 400 அடி தூரத்துக்கும் ஏற்பட்டுள்ள உடைப்புகள் பேராபத்தை விளைவிக்கக் கூடியவையாகத் தோற்றமளிக்கின்றன. மணல் மூட்டைகளை அடுக்குவதின் மூலமும், மணல் மூட்டைகளைக் கொண்டு தடுப்புச் சுவர்களை அமைப்பதின் மூலமும் அந்த உடைப்புக்களை அடைப்பதற்குச் சகல முயற்சியும் எடுக்கப்பட்டு வருகிறது. சைன்யத்தின் வெள்ள நிவாரண வேலை நடவடிக்கைகளை மேற்பார்வையிட்டு நடத்தி வருவதற்காக பிரதான நடவடிக்கைத் தலைமைக் காரியாலயமொன்று திருச்சிராப்பள்ளியில் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது.

நிலைமையை நேரில் கண்டறிந்து, அதைச் சமாளிப்பதற்கு அவசியமான உத்திரவுகளை அளிப்பதற்காக சென்னை, மைசூர், கேரள பிராந்திய, தலைமைச் சைன்ய அதிகாரி, மேஜர் ஜெனரல் எம். ஆர். திவான், வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட பகுதிகளுக்கு விஜயம் செய்தார்.

### காமராஜர் ஆசை

"மக்கள் நலனுக்காக மக்களால் நடத்தப்படும் அரசாங்கத்தில் நாட்டின் அடிப்படைத் தேவைகளைச் செய்து தருவதே எனது நெடுநாளைய ஆசை; அதை நிறைவேற்றுவதிலேயே நான் முழுமூச்சுடன் பாடுபட்டுவருகிறேன்; எனது இலட்சியம் என் வாழ்நாளிலேயே நிறைவேறிவிடும் என்ற நம்பிக்கை எனக்குண்டு" என்று காமராஜர் தமது ஒசூர் தாலுகா சுற்றுப்பயணத்தில் குறிப்பிட்டுள்ளார்.

### அமெரிக்காவின் பாராட்டு

'இந்தியாவிலுள்ள ஏனைய மாநிலங்களுக்குத் தமிழ்நாடு ஒரு முன்மாதிரியாக விளங்குகிறது' என்று இந்தியாவுக்கு வந்துள்ள அமெரிக்கத் தொழில் நுட்ப ஆலோசனைக் குழுத் தலைவர் ஓமார். டி. டேவிட் தமிழக ஆட்சியை வியந்து பாராட்டியுள்ளார்.



### இரத்தக் குழாய்களை இணைக்கும் பசை

தையல் போடாமலேயே இரத்தக் குழாய்களைப் பழுதுபார்க்கும் முறையொன்று இப்போது மேனாட்டில் டெக்ஸால் பல்கலைக் கழகத்தில் கண்டுபிடிக்கப் பட்டிருக்கிறது. திரவ பிளாஸ்டிக் மூலம், வெட்டுப்பட்ட குழாய்களைச் சேர்த்து ஒட்டவைத்து விடுகின்றனர். இதிலே எதும் கெடுதிகள் எற்படவில்லையாம்.



Edited & Published by its owner Sri Triloka Sitaram and Printed by him at his Shivaji News printers, 24, A-Theradi Bazaar, Tiruchi-2.